(ஈ) இப்படிக் கண்டெடுக்கும் சொத்துக்களை பொதுவாக அரசாங்கம் என்ன செய்கிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Yes, Sir.

(b) About sixteen items of Gold coins weighing 17-5/8 varahans and worth about Rs. 700 have been found. It is not exactly known to which period these coins belong to.

(c) Yes. The Tahsildar, Chidambaram, is making further enquiries in the matter and their results will be known later.

(d) Action in such cases is taken as contemplated in the Indian Treasure Trove Act of 1878.

SRI A. VEDARATHNAM : இப்படி கண்டெடுக்கப்பட்ட நாணயங்களில் ஏதாவது எழுத்துக்கள் இருக்கின்றனவா ? அப்படியானல் அவை என்ன என்று கண்டுபிடிக்க முடிந்ததா ? இல்லையென்றால் அதைப்பற்றி ஆராய்ச்சி செய்வதற்கு தொல்பொருள் ஆராய்ச்சிக் கழகத்திற்கு அனுப்பப்பட்டு அவைகள் பரிசிலிக்கப்பட்டதா ? அப்படியானல் அதிலிருந்து ஏதாவது சரித்திரம் கிடைத்திருக்கிறதா ? அப்படியென்றால் அதைப்பற்றியுள்ள விவரங்களை தெரிவிக்க முடியுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த நாணயத்தில் ஒரு பக்கம் யானை இருக்கிறது. இன்னொரு பக்கத்தில் புஷ்பம் இருக்கிறது. அதைப்பற்றி பரிசிலிப்பதற்கு டிப்பார்ட்மெண்ட் ஏற்பாடு செய்துகொண்டிருக்கிறது. இது ராஜ ராஜ சோழன் காலத்திலுள்ள நாணயம் என்று சொல்லப்படுகிறது. இதிலுள்ள எழுத்துக்களை எல்லாம் பரிசீலித்தால் தான் இதிலுள்ள முழு விவரங்களையும் அறிந்துகொள்ள முடியும்.

SRI A. GOVINDASAMY ; ஸார், லால்பேட்டைப் பகுதியில் இம்மாதிரியான நாணயங்கள் இன்னும் இருக்கின்றதா என்பதைக் கண்டுபிடிக்க இன்னும் பூமிக்கடியில் தோண்டிப் பார்க்க அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்போது தோண்டி எடுப்பதைப் பற்றி ஆராய்ச்சி நடக்கவில்லை. எடுத்த நாணயத்தைப்பற்றித் தான் ஆராய்ச்சி நடந்துகொண்டிருக்கிறது.

*Students' Co-operative Societies*

*551 Q.—SRI P. G. MANICKAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கோயம்புத்தூர் ஜில்லாவிலிருக்கும் எத்தனை உயர்நிலைப் பள்ளிக்கூடங்களிலே மாணவர்கள் கூட்டுறவு சொஸைடிகள் ஏற்படுத்தப்பட்டன ?

(ஆ) இந்த சொஸைடிகளில் மாணவர்களின் பங்குத் தொகையாக எத்தனை ரூபாய்கள் செலுத்தப்பட்டிருக்கின்றன ?

(இ) கூட்டுறவு இலாகா மூலமாக இந்த சொஸைடிகளுக்கு எத்தனை ரூபாய்கள் கடன் கொடுக்கப்பட்டிருக்கின்றன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) to (c) The time and labour involved in collection of these figures will not be commensurate with the public purpose to be served.

MR. SPEAKER : Questions are over.